


தமிழ்நாடு அரசு

விதைச்சான்றளிப்பு துறை

# விதைச் சான்று நடைமுறைகள்




**தொகுத்தவர்கள் :**

திரு. **சு. கிருஷ்ணராஜ்,** எம்.எஸ்சி., (விவ)
விதைச் சான்று அலுவலர் (தொ.நு),
விதைச் சான்று உதவி இயக்குனரகம், சேலம் - 636 004.

திரு. **பெ. அண்ணாமலை,** பி.எஸ்சி., (விவ)
விதைச் சான்று உதவி இயக்குனர், சேலம் - 636 004.

திரு. **யா. ஐசக் ஜேசுதாஸ்,** பி.எஸ்சி., (விவ)
விதைச் சான்று துணை இயக்குனர், கோவை - 641 013.

# விதைச் சான்று நடைமுறைகள்

## விதைச் சான்றளிப்பு

உலகோர்க்கு உணவளிக்கும் உன்னத உழவுத் தொழிலுக்கு அடிப்படையான இடு பொருட்களில் முதன்மையானது விதையாகும். நல்ல விதையின் மூலம் எதிர்ப்பார்க்கப்படும் உயர்ந்த மகசூலை அடையலாம். விதைசான்று துறையினால் சான்று செய்த விதைகளே நல்விதையாகும்.சான்று பெற்ற விதைகள் இனச்சுத்தம், அதிக முளைப்புத்திறன், புறச்சுத்தம், அளவான ஈரப்பதம் அதிக விளைச்சளை கொடுக்க கூடியது.

**விதைச்சான்றளிப்பின் நோக்கம் :**

அரசினால் அறிவிக்கை செய்யப்பட்ட பயிர் இரகங்களில் உயர் தரமான விதைகள் உற்பத்தி செய்து, விவசாயிகளுக்கு சான்றளிப்பு மூலம் கிடைக்கச் செய்வதே விதைச்சான்றளிப்பின் முக்கிய நோக்கமாகும்.

**விதைகளின் நிலைகள் :**

1) வல்லுநர் விதை
2) ஆதாரநிலை விதை 1 மற்றும் 2
3) சான்று நிலை

**வல்லுநர் விதை :**

வல்லுநர் விதை என்பது வேளாண்மைப்பல்கலைக் கழகத்திலிருந்து சம்மந்தப்பட்ட மரபியல் துறையைச் சார்ந்த வல்லுநர்களால் உற்பத்தி செய்யப்படுகிறது. வல்லுநர் விதைகள் சான்றளிப்பு துறையின் மூலம் சான்று செய்யப்படுவதில்லை. ஆதாரநிலை விதைகள் உற்பத்தி செய்வதற்கு ஆதாரமாக வல்லுநர் விதைகள் பயன்படுகிறது. வல்லுநர் விதைகளிலிருந்து நேரிடையாக சான்றுநிலை விதைகளை உற்பத்தி செய்ய இயலாது. அவ்வாறு உற்பத்தி செய்ய வேண்டுமாயின் விதைச்சான்று இயக்குநர், கோவை அவர்களிடமிருந்து சிறப்பு அனுமதி பெற வேண்டும்.



**ஆதாரநிலை 1 மற்றும் 2 :**

வல்லுநர் விதைகளிலிருந்து ஆதாரநிலை 1, விதைகள் உற்பத்தி செய்யப்படுகிறது. ஆதாரநிலை 1-லிருந்து ஆதாரநிலை 2 மற்றும் சான்றுநிலை விதைகள் உற்பத்தி செய்யப்படுகிறது. ஆதாரநிலை 1 மற்றும் 2-ற்கு, குறைந்த பட்ச விதைச்சான்று தரங்கள் ஒன்றே. ஆதாரநிலை விதைகளுக்கு வெண்மை நிற சான்றட்டைகள் வழங்கப்படுகிறது.

**சான்றுநிலை விதைகள் :**

ஆதாரநிலை விதைகளிலிருந்து, சான்று நிலை விதைகள் உற்பத்தி செய்யப்படுகிறது. சான்றுநிலை விதைகளுக்கு குறைந்தபட்ச விதைசான்று தரங்கள் மாறுபடுகிறது. சான்று நிலைக்கு நீலநிற சான்றட்டைகள் வழங்கப்படுகிறது.

## சான்று விதைப்பண்ணை அமைத்தல்

1. விதை உற்பத்தியாளர் அனைத்து தொழில் நுட்பங்கள் மற்றும் சான்று நடைமுறைகளை கடைபிடித்து தரமான அதிக விளைச்சலை பெறக்கூடிய விவசாயிகளை தேர்வு செய்து விதைப் பண்ணை அமைக்க வேண்டும்.

2. விதைப்பண்ணை நல்ல மண் வளத்துடன் கூடிய பாசன வசதியுள்ள நிலத்தில் அமைக்கவேண்டும்.

3. விதைப்பெருக்குத்திட்டத்தின்கீழ் போதுமான வல்லுனர்விதை, ஆதாரநிலை விதை உரிய அட்டையுடன், விதைக்கும் முன்பு விதை முள்ளைப்பு காலக்கெடுவிற்குள் கிடைக்கப் பெற்றதா எனவும் விதை மாறுதலில் கிடைக்கப் பெற்றிருப்பின் கூடுதலாக பொருள் மாற்றுப் பட்டியல் மற்றும் விதை இருப்பு சான்று உள்ளதா என் சரிபாத்துக்கொள்ள வேண்டும்.





4. போதுமான வல்லுனர் விதை மற்றும் ஆதாரநிலை விதை கிடைக்கப்பெறாவிடில் சான்றுநிலை -Iலிருந்து சான்றுநிலை-II க்கு பொதுவாக தன் மகரந்தசேர்க்கை பயிர்களுக்கு விதைப் பண்ணை அமைக்க விதைச்சான்று இயக்குனர், கோவை அவர்களிடம் விதைப்பதற்கு முன் சிறப்பு அனுமதி பெறவேண்டும்.

5. விதைப்பண்ணை அமைக்க முளைப்பு காலக்கெடு தேதிக்குள் விதையினை விதைக்க வேண்டும்.

6. வல்லுநர் விதையினை மட்டும் விதை முளைப்பு பரிசோதனை நாளிலிருந்து 13 மாதங்கள் வரை விதைக்க பயன்படுத்தலாம். இந்த காலக்கெடுவிற்கு மேல் விதைக்க பயன்படுத்தும் முன் விதைப்பையினை உரிய அட்டையுடன் பிரிக்காமல் விதைச்சான்று உதவி இயக்குநர் அலுவலக சிறுவிதை பரிசோதனை நிலையத்தில் கொடுத்து பரிசோதித்து வழங்கப்படும் முளைப்பு அறிக்கையுடன் பரிந்துரைக்கப்படும் பரப்பிற்கு விதையினை இரண்டு மாதத்திற்குள் விதைக்க வேண்டும். இந்த அனுமதி முதல் விதை பரிசோதனையிலிருந்து 21 மாதங்களுக்கு மட்டுமே வழங்கப்படும்.

7. விதைப்பண்ணையில் முந்தைய பயிர் ரகம் வேறுபட்டிருக்க வேண்டும். இதனால் தானாக வளர்ந்து செடிகள் கலப்பு ஆகாமல் விதையின் நலத்தை கெடுக்க கூடிய நோயினையும் கட்டுப்படுத்தலாம்.

8. நெல் விதைப்பண்ணையில் நடவின்பொழுது ஆதாரநிலை விதை உற்பத்திக்கு 4 அடிக்கு ஒரு அடியும், சான்றுநிலை விதை உற்பத்திக்கு 8 அடிக்கு 1 அடியும் கலவன் இடைவெளி கண்டிப்பாக வேண்டும்.

9. ஒவ்வொரு விதைப்பண்ணை பயிர் ரகத்திற்கும், வேறு ரகத்திற்கும் பௌதீக மற்றும் இனத்தூய்மை கெடாமல் இருக்க நிர்ணயிக்கப்பட்ட பயிர் இடைவெளி(தனிமைபடுத்தும் தூரம்) வேண்டும்.



| வ. எண் 1 | பயிர் 2 | விலகு தூரம் (மீட்டரில்) | |
|---|---|---|---|
| | | ஆதாரநிலை 3 | சான்றுநிலை 4 |
| 1. | நெல், ராகி, நிலக்கடலை, சாமை | 3 | 3 |
| 2. | வீரிய மக்காச்சோளம் | - | 200 |
| 3. | ரகச்சோளம், வீரிய நெல் | 200 | 100 |
| 4. | ரக கம்பு, ரக மக்காசோளம் ரக சூரியகாந்தி, வெண்டை, மிளகாய் | 400 | 200 |
| 5. | வீரிய கம்பு | 1000 | 200 |
| 6. | ரக பருத்தி, வீரிய பருத்தி | 50 | 30 |
| 7. | துவரை | 250 | 100 |
| 8. | உளுந்து, பாசிபயறு, தட்டை, கொள்ளு, பீன்ஸ் | 10 | 5 |
| 9. | எள் | 100 | 10 |
| 10. | ஆமணக்கு (இரகம் & வீரிய ரகம்) | 600 | 300 |
| 11. | வீரிய சூரியகாந்தி | 600 | 300 |
| 12. | தக்காளி | 50 | 25 |
| 13. | பாகல், பீர்க்கு, புடலை | 1000 | 500 |
| 14. | கத்தரி, மிளகாய் | 200 | 100 |
| 15. | வெண்டை | 400 | 200 |

## அ) உற்பத்தியாளர் பதிவு :

விதைப்பிற்கு முன் ஒரு பயிருக்கு ஒரு பருவத்திற்கு ரூ. 25/- செலுத்தி விதை உற்பத்தியாளராக இனி பதிவு செய்ய வேண்டியதில்லை.

## ஆ) விதை உற்பத்தி விண்ணப்பம் பதிவு :

சான்று திட்டத்தில் விதைப்பு அறிக்கை விண்ணப்பம் பதிவு கட்டணமாக ரூ. 25/- செலுத்த வேண்டும்.

## இ) விதைப்பண்ணை பதிவு :

1. விதைப்பு அறிக்கைகள் உரிய படிவத்தில் 3 நகல்களில் முழுமையாக பூர்த்தி செய்து விதைப்பறிக்கை பதிவு கட்டணம், புதிய வயலாய்வுகட்டணம் (இணைப்பு 1) விதை ஆதாரத்திற்கான சான்று அட்டை (அ) விதை மீதி இருப்பு சான்று மற்றும் விவசாயிகளுக்கு விதை வழங்கியதற்கான ரசீது ஆகியவை இணைக்கப்பட வேண்டும். விதை சோதனை கட்டணம் மற்றும் இனத்தூய்மை ஆய்வு கட்டணம் மட்டும் விதைப்பு அறிக்கையுடன் (அ) விதை மாதிரியுடன் செலுத்தலாம்.

2. ஏக்கருக்கு துறையின் மூலம் பரிந்துரைக்கப்படும் விதை அளவினை பயன்படுத்த வேண்டும். அதிக முளைப்புதிறன் மற்றும் பயிர் இடைவெளி காரணமாக விதை அளவு மாறுபட்டு இருப்பின் விதைப்பு அறிக்கை பதிவின் போதே விசாஉஇ-ரின் அனுமதி பெற வேண்டும். ஒட்டு விதை, தாயாதி விதை உற்பத்தியில் கூடுதலாக 10%ம். இதர பயிர்களில் கூடுதலாக 20% வரை பதிவு பரப்பிற்கு மேல் இருந்தால் வயல் ஆய்வில் சான்று பணியிலிருந்து தள்ளுபடி செய்யப்படும். எனவே விதைப்பு அறிக்கையில் விதைப்பண்ணை நீள, அகலத்தினை சரியாக குறிப்பிட வேண்டும்.

3. வல்லுனர் விதையினை சோதனை நாளிலிருந்து 13 மாதங்கள் வரை விதைக்க பயன்படுத்தலாம். இந்த காலக் கெடுவிற்கு பின் மேலும் 8 மாதங்கள் வரை (சோதனை நாளிலிருந்து 21 மாதங்கள் வரை) விசாஉஇ-அலுவலகத்தில் உள்ள சிறு விதை பரிசோதனை நிலையத்தில் ஆய்வு செய்து பரிந்துரைக்கப்படும் விதை அளவின்படி விதைக்க பயன்படுத்தலாம். வல்லுனர் விதையினை விதைக்கும் முன் விதை சான்று அலுவலரிடம் ஆய்விற்காக காண்பித்து சான்று பெறும் நடைமுறை இனி இல்லை.

4. வயல் ஆய்வு பணியில் இடையூறு இல்லாமல் ஊடுபயிருடன் அமைக்கப்பட்ட விதைப் பண்ணைகளை எந்த நிலை விதை உற்பத்திக்காகவும் பதிவு செய்யலாம்.



## ஈ) வயல் ஆய்வு :

1. ஒவ்வொரு வயல் ஆய்விலும் முறையான விதைப்பண்ணை மற்றும் வயல் தரத்தில் தேறினால் மட்டும் விதை சுத்திப்பணிக்காக பயிர் அறுவடைக்கு அனுமதிக்கப்படும். தள்ளுபடி காரணியை நீக்கி தள்ளுபடி பரிந்துரை நாளிலிருந்து 10 நாளுக்குள் மறு ஆய்விற்கு விசாதுஇ-க்கு விண்ணப்பிக்க வேண்டும். வயல் ஆய்வுக் கட்டணத்தில் 75% தொகையை செலுத்தி விசாஉஇ-ன் அனுமதியுடன் மறு ஆய்வு செய்யலாம்.

2. ஒட்டு விதை மற்றும் தாயாதி விதை உற்பத்தியில் கூடுதலாக 10%-ம், இதர பயிர்களில் கூடுதலாக 20% வரை பதிவு செய்த பரப்பிற்கு மேல் இருந்தால் முறையற்ற விதை ஆதாரம் என குறிப்பிட்டு விதைப் பண்ணையினை சான்று பணியிலிருந்து தள்ளுபடி செய்ய பரிந்துரை செய்யப்படும்.

3. **நிலக்கடலை ஆய்வு :** விதைப் பண்ணை விவசாயி இருப்பிடத்தில் இறுதி வயல் ஆய்விலிருந்து 45 நாளிற்குள் இதர ரக கலப்பு, சான்று நிலையில் 2%-மும் ஆதார நிலையில் 1%-க்கும் கூடுதலாக இருந்தால் விதைக்குவியல் தள்ளுபடிக்கு பரிந்துரை செய்யப்படும்.

4. **பருத்தி ஆய்வு :** விதைப்பண்ணையிலிருந்து அறுவடை செய்யப்பட்டு நல்ல நிலையில் பருத்தி சேமித்து வைக்கப்பட்டுள்ளதா என்பதனை இறுதி வயல் ஆய்விலிருந்து 45 முதல் 50 நாளிற்குள் விசாஅ-ரால் ஆய்வு செய்யப்படும்.

5. வயல் ஆய்வில் தேர்ச்சி பெற்ற விதைப் பண்ணைகளிலிருந்து பெறப்பட்ட வயல் மட்ட விதைக் குவியலுக்கு சுத்தி அறிக்கை பெறுவதற்காக விண்ணப்பித்து விதை குவியல் புதிய கோணிப்பைகளில் பிடித்து விசாஅ-ரால் ஆய்வு செய்து, சீல் இடப்பட்ட பின் விதை சுத்தி அறிக்கையுடன் விதை சுத்தி நிலையத்திற்கு அனுப்பவேண்டும். ஒரு முறை உபயோகித்த சாக்குபைகளை மீண்டும் உபயோகிக்க (சான்று நிலைக்கு மட்டும்) விசாஉஇ-ரின் அனுமதி பெறவேண்டும்.





## (உ) விதை சுத்திப்பணி

1. அனைத்து பயிரிலும் இறுதி வயல் ஆய்விலிருந்து 3 மாதத்திற்குள் விசுநி-க்கு அனுப்பி மேலும் 3 மாதத்திற்குள் விதை சுத்தி செய்து விதை மாதிரி எடுக்கப்படவேண்டும். பருத்தி விதை உற்பத்தியாளர் பருத்தி அறவைக்குப் பின் விருப்பப்பட்டால் அங்கீகரிக்கப்பட்ட பஞ்சு நீக்க நிலையத்தில் பஞ்சு நீக்கம் செய்ய அனுமதிக்கப்படும். அவ்வாறு பஞ்சு நீக்கம் செய்த விதைகளில் முற்றாத, உடைந்த, சிறு பொக்கு விதைகள் 3 சதத்திற்கு மேல் இல்லாதவாறு குறிப்பிட்ட சல்லடையினை கொண்டு விதை சுத்தி செய்யப்படவேண்டும்.

2. நெல் விதைக் குவியல் விசாஅ-ரால் விவசாயியின் இருப்பிடத்தில் (அ) விதை சுத்தி செய்யுமுன் விதை ஆய்வு செய்து 1%க்குமேல் இதர ரகக்கலப்பு இருப்பின் விதைக்குவியல் சான்றுப் பணியிலிருந்து விலக்கிக் கொள்ள விதை உற்பத்தியாளருக்கு ஆலோசனை வழங்கப்படும். விதை உற்பத்தியாளர் விருப்பப்பட்டால் விசாஅ-ரால் ஒரு விதை மாதிரி விதை பரிசோதனை நிலையத்திற்கு அனுப்பி ஆய்வு முடிவில் 1%க்கு மேல் இதர ரக கலப்பு இருந்தால் சான்று பணியிலிருந்து தள்ளுபடி செய்யப்படும்.

   மேலும் விதைக் குவியலில் இதர பயிர் விதைகள் குறிப்பிட்ட விதை தரத்திற்கு மேல் இருந்தால் விதை உற்பத்தியாளரின் விருப்பத்தின் பேரில் விதை மாதிரி எடுக்கப்பட்டு அனுப்பி பின் விதை பரிசோதனை நிலைய ஆய்வில் குறிப்பிட்ட தரத்திற்கு இரண்டு மடங்கிற்கு மேல் இருந்தால் விதைச் சான்றுப் பணியிலிருந்து தள்ளுபடி செய்யப்படும்.

3. பயறு வகைகள் மற்றும் சூரியகாந்தி ஒரு விதைக்குவியல் 1000 கிலோ வரையிலும் மற்றும் எள்ளில் 500 கிலோ வரையிலும் கையினால் சரியான சல்லடை கொண்டு சுத்தம் செய்யலாம்.

   நிலக்கடலை, தக்காளி, மிளகாய், கத்தரி போன்ற சில காய்கறி விதைகள் தேவையான விதை சுத்தி இயந்திரம் இல்லாததால் கையினால் சுத்தம் செய்யப்படுகிறது.



4. நிலக்கடலை விதைக்குவியல் விதை சுத்தி நிலையத்திற்கு இருப்பு வைத்த பின் விதை சான்று அலுவலரின் ஆய்வில் முற்றாத, உடைந்த, பிஞ்சு காய்கள் 4% க்குள் இருத்தல் வேண்டும்.

5. சுத்தி செய்த பின் விதை மாதிரி எடுக்கப்பட்டு, சான்று அட்டைகளுக்கான தேவைப்பட்டியல் (விதை ஆய்வில் தேறினால் மட்டும் சான்றட்டை வழங்க) விதை மாதிரியுடன் விதைச் சான்று உதவி இயக்குனருக்கு அனுப்படவேண்டும். விதை பரிசோதனைக் கட்டணம் ஒரு மாதிரிக்கு ரூ. 30/- ஏற்கனவே விதைப்பு அறிக்கை பதிவின் போது செலுத்தாமல் இருந்தால் தொகையினை செலுத்தி விதை மாதிரியினை ஒப்படைக்கவேண்டும்.

   ஆதார நிலை பருத்தி மற்றும் தாயாதி ரகங்கள் மற்றும் வீரிய விதை உற்பத்தியில் துவரை, ஆமணக்கு, தக்காளி, கத்தரி பயிர்களில் இனத்தூய்மைக்காக விதை மாதிரி எடுக்கப்பட்டு விசாஇ-னரகத்திற்கு விசாஉஇ-மூலம் அனுப்பப்படுகிறது. இனத்தூய்மை ஆய்வுக் கட்டணமாக குவியலுக்கு ரூ. 300/- ஏற்கனவே செலுத்தாவிடில் விதை மாதிரியுடன் செலுத்தவேண்டும்.

6. விதை பகுப்பாய்வு முடிவு விதை உற்பத்தியாளருக்கு விதைச்சான்று உதவி இயக்குனரால் அனுப்பப்படும். விதை பகுப்பாய்வு நாளிலிருந்து இரு மாதங்களுக்குள்ளும், இனப்பரிசோதனை நாளிலிருந்து ஒரு மாதத்திற்குள்ளும் புதிய விதைக் கொள்கலன்களில் விதை உற்பத்தியாளர் அட்டை மற்றும் சான்றட்டையினை சரியாக அச்சிட்டு பை தைக்கும் இயந்திரம் கொண்டு தைக்கப்படவேண்டும்.

   குறிப்பிட்ட காலத்திற்குள் சான்றட்டையுடன் தைக்கும் பணி முடிக்கப்படாவிடில் விசாஉஇ-ரிடம் சிறப்பு அனுமதி பெற்று தாமதக் கட்டணம் மற்றும் விதை பரிசோதனை கட்டணம் செலுத்தி உறுதிபாக்க மாதிரி எடுத்து, ஆய்வில் தேறினால் முதலில் ஆய்வு செய்த நாளிலிருந்து காலக்கெடு நாள் நிர்ணயிக்கப்படும்.

7. **மறு சுத்தி மற்றும் மறு மாதிரி :** ஒரு விதை மாதிரி எந்த ஒரு காரணியில் தேறாவிடில், உற்பத்தியாளரின் கோரிக்கையின் பேரில் ஒரு மறுமாதிரி நேரடியாக விதைச்சான்று அலுவலரால் எடுத்து, தேறாத காரணிக்கு மட்டும் ஆய்வு முடிவு பெற்று சான்றுப் பணி தொடரலாம். விதை முளைப்பு ஆய்வில் குறிப்பிட்ட விதை தரத்திற்கு 50% வரை இருப்பின் விதை சுத்தி செய்து (அ) நேரடியாக விசாஅரால் விதை மாதிரி எடுக்கப்படும். 50% மேல் இருப்பின் விசாஉஇ-ரிடம் அனுமதி பெற்று விதை சுத்தி செய்து சான்று பணி தொடரலாம். இதர ரக விதைகள் மற்றும் இனத்தூய்மை ஆய்வில் மட்டும் தேறாவிடில் மறுமாதிரி எடுத்து சான்றுப் பணி தொடர இயலாது.

மறுமாதிரி எடுக்க முளைப்பு பரிசோதனை நாளிலிருந்து 15 நாளுக்குள் விதை உற்பத்தியாளர் விசாஅ/விசாஉஇ-க்கு விண்ணப்பித்து, அனுமதி பெற்ற 15 நாளுக்குள் மறுசுத்தி (அ) மறுமாதிரி எடுக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

8. விவசாயி (அ) அமைப்பாளர் பெயரில் சான்றட்டை பொருத்த, உற்பத்தியாளர் விசாஉஇ-ரிடம் சிறப்பு அனுமதி பெற்று ஒரு விதைக் குவியலுக்கு ரூ 50/- செலுத்தி சான்றட்டை பொருத்திக் கொள்ளலாம்.

9. **காலக்கெடு :** பொதுவாக எல்லா பயிர் ரகங்களுக்கும் உரிய காலத்தில் விதை சுத்தி நிலையப்பணிகள் முடித்திருப்பின் விதை பகுப்பாய்வு நாளிலிருந்து 9 மாதங்கள் விதை முளைப்பு காலக்கெடு வழங்கப்படும். காலக்கெடுவிற்குள் விதைக் குவியல் (அ) விதை சுத்திநிலையத்தில் சேர்க்கப்படாமல் (ஆ) உரிய காலத்தில் விதை சுத்தி செய்யப்படாமலோ (இ) உரிய காலத்தில் மறுமாதிரியோ எடுக்கப்படாத நிலையில் (ஈ) உரிய காலத்தில் சான்றட்டை பொருத்தப்படாமலோ இருந்தால் அந்த விதைக் குவியலுக்கு இறுதி வயல் ஆய்வு நாளிலிருந்து 15 மாதங்கள் (அ) பகுப்பாய்வு நாளிலிருந்து குறைந்தபட்சம் 6 மாதங்கள் வரை காலக்கெடு வழங்கப்படும்.



## ஊ) திறனாய்வு

தமிழ்நாட்டில் உற்பத்தி செய்து காலக்கெடு முடிந்த (அ) முடியும் தருவாயில் உள்ள விதைகளை திறனாய்வு செய்ய விசாஉஇ-ரிடம் விண்ணப்பித்து தொகையை செலுத்தலாம். (அ) அனுமதி பெற்ற ஒரு மாதத்தில் உரிய திறனாய்வு மற்றும் விதை பரிசோதனை கட்டணத்தை செலுத்த வேண்டும். உரிய தொகை செலுத்தப்பட்ட உடன் சம்பந்தப்பட்ட விதை சான்று அலுவலர் திறனாய்வு பணி மேற்கொள்ள உத்திரவு கிடைக்கப்பெற்ற 10 நாட்களுக்குள் விதைக் குவியலை ஆய்வு செய்து சான்றட்டை மற்றும் உரிய சீலுடன் உள்ள விதைப் பைகளை மட்டும் பிரித்து விதை மாதிரி எடுக்கப்படும். பூச்சி தாக்குதல் இருப்பின் விதை சுத்தி செய்து தேவையிருப்பின் காய வைத்து விதை மாதிரி எடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

இதர மாநில விதைக் குவியலுக்கு திறனாய்வு பணி மேற்கொள்ள விதைக் குவியலின் முழு விபரங்களுடன், படிவம் II இணைத்து விதைச் சான்று இயக்குனர், கோவை அவர்களிடம் அனுமதி பெறவேண்டும். அனுமதி கிடைக்கப்பெற்ற 15 நாளுக்குள் உரிய திறனாய்வு கட்டணம், விதை பரிசோதனை கட்டணம் மற்றும் தேவைக்கேற்ப இனத்தூய்மை ஆய்விற்கான கட்டணத்தை செலுத்தவேண்டும்.

விதை பரிசோதனை நாளிலிருந்து காலக்கெடு நாள் ஆறு மாதங்கள் வரை வழங்கப்படும்.

## எ) மறு கொள்கலன்களில் பிடித்தல்

சான்று பெற்ற விதை நேரடியாக (அ) விதை சுத்தி செய்து (ஆ) வேறு உண்மையான காரணத்திற்காக வேறு கொள்கலன்களில் மாற்ற விசாஉஇ-ரிடம் அனுமதி பெறவேண்டும். விதை சுத்தி செய்து புதிய கொள்கலன்களில் பிடித்தல் (அ) நேரடியாக புதிய கொள்கலன்களில் பிடித்தல் போன்ற மேற்பார்வை பணிக்கான உரிய தொகை மற்றும் விதை பரிசோதனை கட்டணத்தை செலுத்த வேண்டும். விதை பரிசோதனையில் தேறினால் புதிய சான்றட்டையில் பழைய சான்றட்டையில் உள்ள விபரங்களை அச்சிட்டு தைத்து சீல் இடப்படும்.





வெளி மாநில விதைக்குவியலுக்கு புதிய கொள்கலன்களில் பிடிக்க . விதைச்சான்று இயக்குனர் அவர்களின் அனுமதி மற்றும் வழிகாட்டு முறைப்படி செயல்பட வேண்டும்.

## ஏ) விதை சுத்தி நிலைய உரிமம்

புதிய விதை சுத்தி நிலையங்களுக்கு உரிமம் பெற விசாஇ அவர்களிடமும், மூன்று ஆண்டு முடிந்த உரிமத்தினை புதுப்பிக்க விசாதுஇ/கோவை அவர்களுக்கு விண்ணப்பத்தை முழுமையாக பூர்த்தி செய்து உரிய தொகையினை விதைச்சான்று உதவி இயக்குனர் அலுவலகத்தில் செலுத்தி உரிய வழி மூலமாக விண்ணப்பிக்க வேண்டும். புதிய உரிமம் பெற ரூ. 2000/-ம் உரிமம் புதுப்பிக்க ரூ. 1000/-ம் செலுத்தவேண்டும்.

காலக்கெடு முடிந்து ஒரு மாதத்திற்குள் உரிமம் புதுப்பிக்க விண்ணப்பித்தால் ரூ. 250/- தாமதக் கட்டணமாக செலுத்த வேண்டும்.

காலக்கெடு முடிந்து ஒரு மாதத்திற்கு மேல் விண்ணப்பிக்கும் நிலையில் புதிதாக உரிமம் பெற உரிய நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்.

## சிறப்பு அனுமதிகள் பெற யாரை அணுக வேண்டும்.

### விதைச்சான்று உதவி இயக்குநர், சேலம்.

1. காலக்கெடு முடிந்த வல்லுனர் விதைகளை பயன்படுத்த.
2. சான்றுப் பணியிலிருந்து விலக்கிக் கொள்ள.
3. வயல் மட்டத்தில் / விதை மட்டத்தில் விதை நிலை இறக்கம் செய்ய.
4. ஒரு முறை உபயோகித்த கோணிப்பைகளை மீண்டும் பயன் படுத்த..
5. விதை உற்பத்தியாளர் பெயரிலிருந்து அமைப்பாளர் (அ) சாகுபடியாளரின் பெயரில் சான்றளிக்க பெயர் மாற்றுதல்.
6. தமிழக சான்று விதைக்கு மட்டும் காலக்கெடு முடியும் முன் (அ) முடிவடைந்த விதைக் குவியலுக்கு திறனாய்வு செய்ய.
7. சான்றுப் பணியில் தாமதம் (விதைக்குவியல் விதை சுத்தி நிலையத்தில் சேர்க்க / விதை சுத்தி பணி / சான்றட்டை பொருத்தும் பணி / திறனாய்வு பணி)
8. வெளி மாநிலத்திற்கு விதையினை அனுப்ப படிவம் II அளித்தல்.
9. மறு கொள்கலன்களில் பிடித்தல்.

### விதைச்சான்று துணை இயக்குநர், கோவை.

1. விதை சுத்தி நிலைய உரிமம் புதுப்பித்தல்.
2. தள்ளுபடி செய்த விதைப் பண்ணையை மறு ஆய்வு செய்ய.

### விதைச்சான்று இயக்குநர், கோவை.

1. சான்று நிலை 1 லிருந்து சான்று நிலை 2 விதை உற்பத்தி செய்ய.
2. விதை சுத்தி நிலையத்திற்கு புதிய உரிமம் பெற.
3. பிற மாநிலங்களில் சான்றளிக்கப்பட்ட விதைகளை திறனாய்வு செய்ய.
4. எந்த ஒரு சிறப்பு அனுமதியில் விதிவிலக்குகளுக்கு.
5. மேல் முறையீடு.

# புதிய விதைச் சான்று கட்டணம்

அரசு எண் : 567 / நாள் : 8.11.2002

| வ. எண் | விபரம் | புதிய விதைச் சான்று கட்டணம் |
|---|---|---|
| 1. | விதைச் சான்று திட்டத்தில் பதிவு செய்ய விண்ணப்ப கட்டணம் | ரூ. 25/- ஒரு விதைப்பு அறிக்கைக்கு |
| 2. | சான்றட்டை கட்டணம் - வெள்ளை | ரூ. 3/- + 11% வரி |
| | நீலம் | ரூ. 2/- + 11% வரி |
| | ***வயல் ஆய்வு கட்டணம் / ஏக்கருக்கு*** | |
| 1. | நிலக்கடலை, எள், சூரியகாந்தி, உளுந்து, பாசிப் பயறு, காராமணி, ரக துவரை, கொண்டை கடலை, ஆமணக்கு | ரூ. 50/- / ஏக்கருக்கு |
| 2. | நெல், ரக சோளம், ரக கம்பு, ராகி, சாமை | ரூ. 60/- ஏக்கருக்கு |
| 3. | ரக மக்காசோளம் | ரூ. 70/- ஏக்கருக்கு |
| 4. | ரக பருத்தி | ரூ. 80/- ஏக்கருக்கு |
| 5. | வீரிய நெல், வீரிய சோளம், வீரிய கம்பு, வீரிய சூரியகாந்தி, ரக தக்காளி, ரக கத்தரி, ரக வெண்டை, மிளகாய், கீரை, புடலை வகைகள், கொத்தவரை, பிரென்ச் பீன்ஸ் | ரூ. 130/- ஏக்கருக்கு |
| 6. | வீரிய மக்காசோளம், மக்காசோளம் ஆதார நிலை | ரூ. 140/- ஏக்கருக்கு |
| 7. | வீரிய துவரை, வீரிய ஆமணக்கு | ரூ. 180/- ஏக்கருக்கு |
| 8. | வீரிய பருத்தி, பருத்தி தாயாதி ரகங்கள் வீரிய காய்கறி வகைகள் | ரூ.250/- ஏக்கருக்கு |
| 9. | இனத்தூய்மை ஆய்வு | ரூ. 300/- ஒரு விதை மாதிரிக்கு |
| 10. | விதை பரிசோதனை கட்டணம் | ரூ. 30/- ஒரு விதை மாதிரிக்கு |
| 11. | மறு சுத்தி செய்ய மேற்பார்வை கட்டணம் | ரூ. 25/- ஒரு குவிண்டாலுக்கு |
| 12. | மறு கொள்கலனில் பிடிக்க மேற்பார்வை கட்டணம் | |
| | 1. சிறு தானியம், பயறு வகைகள், எண்ணெய் வித்து | ரூ. 25/- ஒரு குவிண்டாலுக்கு |
| | 2. ரக பருத்தி, வீரிய பருத்தி, காய்கறிகள் | ரூ. 50/- ஒரு குவிண்டாலுக்கு |



| வ. எண் | விபரம் | புதிய விதைச் சான்று கட்டணம் |
|---|---|---|
| | ***திறனாய்வு (தமிழ்நாட்டில் சான்று பெற்ற விதைக்கு மட்டும்)*** | |
| 1. | நேரடியாக - சிறு தானியங்கள், பயறு வகைகள் எண்ணெய் வித்துக்கள் | ரூ. 30/- குவிண்டாலுக்கு |
| | - ரக பருத்தி, வீரிய பருத்தி, காய்கறிகள் | ரூ.50/- குவிண்டாலுக்கு |
| 2. | மறு சுத்தி செய்து / மறு கொள்கலனில் பிடிக்க - சிறு தானியங்கள், பயறு வகைகள் எண்ணெய் வித்துக்கள் | ரூ. 40/- குவிண்டாலுக்கு |
| | - ரக பருத்தி, வீரிய பருத்தி, காய்கறிகள் | ரூ. 60/-குவிண்டாலுக்கு |
| | ***திறனாய்வு (வெளி மாநிலத்தில் சான்று பெற்ற விதைக்கு)*** | |
| 1. | நேரடியாக - சிறு தானியங்கள், பயறு வகைகள் எண்ணெய் வித்துக்கள் | ரூ. 50/- குவிண்டாலுக்கு |
| | - ரக பருத்தி, வீரிய பருத்தி, காய்கறிகள் | ரூ. 60/-குவிண்டாலுக்கு |
| 2. | மறு சுத்தி செய்து / மறு கொள்கலனில் பிடிக்க - சிறு தானியங்கள், பயறு வகைகள் எண்ணெய் வித்துக்கள் | ரூ. 70/- குவிண்டாலுக்கு |
| | - ரக பருத்தி, வீரிய பருத்தி, காய்கறிகள் | ரூ.100/-குவிண்டால் |
| | ***விதை சுத்தி நிலைய உரிமம்*** | |
| 1. | புதிய உரிமம் பெற | ரூ. 2000/- 3 ஆண்டுகளுக்கு |
| 2. | உரிமம் புதுப்பிக்க | ரூ. 1000/- 3 ஆண்டுகளுக்கு |
| 3. | காலக்கெடு முடிந்து ஒரு மாதத்திற்குள் உரிமம் புதுப்பிக்க தாமதக் கட்டணம் | ரூ. 250/- |
| 4. | உரிமத்தில் ஏதாவது சேர்க்க | ரூ. 100/- |
| 5. | உரிமம் நகல் பெற | ரூ. 100/- |
| 6. | மேல் முறையீடு (விதை சட்டம் 1966) | ரூ. 100/- |
| 7. | மேல் முறையீடு (விதை கட்டுப்பாடு ஆணை 1983) | ரூ. 50/- |
| 8. | உற்பத்தியாளரிடமிருந்து சாகுபடியாளர் (அ) அமைப்பாளர் பெயரில் சான்றட்டை பொருத்த | ரூ. 50/- ஒரு விதைப்பு அறிக்கைக்கு |
| 9. | காலம் கடந்து விதை கொள் முதல், விதை சுத்தி கரிப்பு/ சான்றட்டை பொருத்த | ரூ. 50/- ஒரு விதைப்பு அறிக்கைக்கு |

# விதை தரம்

| வ. எண் | பயிர் | விதை மாதிரி அளவு (கிராம்) | ஆதாரநிலை மற்றும் சான்று நிலை | | | பிற ரக விதைகள் | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | முளைப்பு % | புறத்தூய்மை % | ஈரப்பதம் % | ஆதாரநிலை | சான்றுநிலை |
| 1. | நெல், வீரிய நெல் | 400 | 80 | 98 | 13 | 0.05 | 0.2 |
| 2. | ரகச்சோளம், வீரிய சோளம் | 900 | 75 | 98 | 12 | 10/கிலோவிற்கு | 20/கிலோவிற்கு |
| 3. | வீரிய மக்காசோளம் | 1000 | 80 | 98 | 12 | - | - |
| 4. | ரகக் கம்பு, வீரிய கம்பு | 150 | 75 | 98 | 12 | - | - |
| 5. | ராகி, சாமை | 80 | 75 | 97 | 12 | - | - |
| 6. | ரகமக்காச்சோளம் | 1000 | 90 | 98 | 12 | 10/கிலோவிற்கு | 20/கிலோவிற்கு |
| 7. | ரகப்பருத்தி | 1000 | 65 | 98 | 10 | - | - |
| 8. | வீரியபருத்தி (பஞ்சு நீக்கியது) | 250 | 65 | 98 | 10 | - | |
| 9. | உளுந்து, பாசிப்பயறு துவரை | 1000 | 75 | 98 | 9 | 10/கிலோவிற்கு | 20/கிலோவிற்கு |
| 10. | காராமணி | 1000 | 75 | 98 | 9 | 5/கிலோவிற்கு | 10/கிலோவிற்கு |
| 11. | நிலக்கடலை | 1000 | 70 | 96 | 9 | - | - |
| 12. | எள் | 70 | 80 | 97 | 9 | 10/கிலோவிற்கு | 20/கிலோவிற்கு |
| 13. | ரக சூரியகாந்தி, வீரிய சூரியகாந்தி | 1000 | 70 | 98 | 9 | - | - |
| 14. | ஆமணக்கு | 1000 | 70 | 98 | 8 | 5/கிலோவிற்கு | 10/கிலோவிற்கு |
| 15. | சோயாபீன்ஸ் | 1000 | 70 | 98 | 12 | 10/கிலோவிற்கு | 20/கிலோவிற்கு |
| 16. | தக்காளி | 70 | 70 | 98 | 8 | - | - |
| 17. | வெண்டை | 1000 | 65 | 99 | 10 | 10/கிலோவிற்கு | 20/கிலோவிற்கு |
| 18. | பாகல், புடலை, சுரை, பூசணி | 1000 | 60 | 98 | 7 | - | - |
| 19. | பீர்க்கு | 1000 | 60 | 98 | 7 | 5/கிலோவிற்கு | 10/கிலோவிற்கு |
| 20. | கீரை | 70 | 70 | 95 | 8 | 10/கிலோவிற்கு | 20/கிலோவிற்கு |
| 21. | கத்தரி | 150 | 70 | 98 | 8 | - | - |
| 22. | மிளகாய் | 150 | 60 | 98 | 8 | - | - |

ஜெயந்த் ஆப்செட், சேலம்-4. ✆ 2430400, 2448385

